# ஸ்ரீ ராமாநுஜன் — 221

    


சென்னை ஸ்த்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.



ஆசிரியர் : **ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.**



| ஸம்புடம் **19** | பிலவங்கஸு வைகாசி மாதத்திற்காக<br>வெளியிடப்பட்டது 28-4-67 | ஸஞ்சிகை **5** |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 96.

**அருளா லடியி லெடுத்தமா லன்பால்***
**இருளார்ந்த தம்முடம்பை யிச்சித்து—*இருவிசும்பில்**
**இத்துடன் கொண்டேக் இசைவுபார்த்தேயிருந்த***
**சுத்திசொல்லும் மா றன்செஞ் சொல்.**

| | | | |
|---|---|---|---|
| அருளால் | க்ருபையினாலே | இத்துடன் கொண்டு ஏக | (தம்மை) இந்த சரீரத்தோடே கொண்டுபோக |
| அடியில் எடுத்த மால் | (ஸம்ஸாரத்தில் நின்றும்) அடியிலே யெடுத்தருளின எம்பெருமான் | இசைவு பார்த்தே இருந்த | (தமது) அனுமதியை எதிர் பார்த்திருந்த |
| அன்பால் | பிரேம விசேஷத்தாலே | சுத்தி | அப்பெருமானது மனத் தூய்மையை |
| இருள் ஆர்ந்த தம் உடம்பை இச்சித்து | ஹேயமான தமது திருமேனியை யாசைப்பட்டு | மாறன் செஞ் சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தி யான பதிகம் |
| இரு விசும்பில் | பரமபதத்தில் | சொல்லும் | தெரிவிக்கும். |

* * *—திருவாய்மொழி தொடங்கும்போதே *மயர்வறமதிநலமருளினன்* என்னும்படியாக அடியிலே தம்மை விஷயீகரித்தருளின ஸர்வேச்வரன் தம்மைப் பரமபதத்தேறக் கொண்டுபோகத் திருவுள்ளம்பற்றி, இந்த சரமதிருமேனியோடே கொண்டுபோகப் பாரித்து அதற்குத் தம்முடைய இசைவை எதிர்பார்த்திருந்தமையை ஆழ்வார் *அருள்

பெறுவாரடியார் பதிகத்திலே அருளிச் செய்தாரென்றதாயிற்று. இப்பதிகத்திலே *இகழ் வின்றி யென்னெஞ்சத்தெப்பொழுதும் பிரியானே* என்ற பாசுரத்தில் நோக்காகவும், மேல் பதிகத்தில் *மங்கவொட்டுன்மாமாயை என்றதை நோக்கியும் அருளிச்செய்தபடி.

இத்திருவாய்மொழிக்கு அவதாரிகையிடத் தொடங்கும்போதே நம்பிள்ளை யருளிச் செய்வது பாரீர்—*"பொய்ந்நின்ற ஞானந்தொடங்கி இவ்வளவும் வர ஈச்வரனை ஆழ்வார் பின் தொடர்ந்தபடி சொல்லிற்று; இது தொடங்கி ஆழ்வாரை ஸர்வேச்வரன் பின் தொடருகிறபடி சொல்லுகிறது" என்று. அதாவது, இதுவரையில் ஆழ்வார் எம்பெருமானிடத்தில் யாசகராய் நின்றார்; இனி (*முனியே நான்முகனென்னும் பதிகத்தளவும்) எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே யாசகனாய் நிற்கிறானென்கை. இத்திருவாய்மொழியில் மூன்றாம்பாட்டில் *இன்று விண்ணுலகந் தருவானாய் விரைகின்றான்* என்றருளிச் செய்கையாலே ஆழ்வாரைப் பரமபதத்தேறக் கொண்டுபோகையிலே எம்பெருமான் தான் விரைந்து 'ஆழ்வாரே! வாரீர், வாரீர்' என்று வேண்டுகின்றமை தெரிகின்றது. அவ்வளவேயுமன்றிக்கே சரமசரீரமாகையாலே ஆழ்வாருடைய திருமேனியில் தனக்குண்டான வியாமோஹத்தாலே கொண்டுபோக விரைந்ததையுங்கூட மறந்து இத்திருமேனி யநுபவத்திலே மிகவும் சபலனாய் முன்பு ஆய்ச்சியரோடு குரவை கோத்தபோது அநேக விக்ரஹபரிக்ரஹம் பண்ணி யநுபவித்தாப் போலவும், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறாயிரம் தேவிமார்களை த்வாரகையில் பதினாறாயிரம் விக்ரஹங்கள்கொண்டு அநுபவித்தாப்போலவும் அநேக விக்ரஹங்கொண்டு ஆழ்வாருடைய அவயவங்கள் தோறுமநுபவிக்கவும் விரும்பி அதற்கு அநுமதி பண்ணுமாறு வேண்டிக்கொண்டான். அதை ஆழ்வார் வெகு சிரமப்பட்டு விடுவித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆயினும் எம்பெருமானுடைய அநுவர்த்தனத்தில் குறைவில்லையே. இதையெல்லாம் திருவுள்ளம்பற்றியே நம்பிள்ளை "இது தொடங்கி ஆழ்வாரை ஸர்வேச்வரன் பின் தொடருகிறபடி சொல்லுகிறது" என்று மருமமறிந்து அருளிச்செய்தார்.

எம்பெருமானைப் பெறவேணுமென்று ஆழ்வார்க்கு விடாய் அதிகமா? ஆழ்வாரைப் பெறவேணுமென்று எம்பெருமானுக்கு விடாய் அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில், ஆழ்வாருடைய விடாய் சிறிது; எம்பெருமானுடைய விடாய் தானே பெரிது என்று ஸித்தாந்தம் செய்யவேண்டியதாகிறது. இவ்விஷயம் கீழேயே (9-6-10) *வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்றவென்னை யொழிய என்னின் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினான்* என்னும் பாசுரத்தினால் ஆழ்வார் தம்மாலேயே வெளியிடப்பட்டுள்ளது.

எம்பெருமான் அப்படி பெருவிடாயனாயிருந்துவைத்தும், ஆழ்வாரைக்கொண்டு இவ்வுலகுக்கு [*தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்னும்படியாக] உணவளிக்க விரும்பியிருந்ததனால் தன் விடாயை யடக்கிக்கொண்டு ஸமயமெதிர்பார்த்திருக்க வேண்டியதாயிற்று. அக்காரியமும் ஒருவாறு தலைக்கட்டுமளவான வாறே இனி யெம்பெருமான் ஆறியிருக்கமாட்டானே. திருவாட்டாற்றிலே தங்கு வேட்டையாக வந்து நிற்கிறவனாகையாலே ஆழ்வாரைக் கொண்டுபோகையிலே அவனுக்கு விரைவுமிக்கது; ஏன்? திருநாட்டிலே கொண்டுபோய் அநுபவிக்கவேணுமென்று என்ன

நிர்ப்பந்தம்? இங்கேதான் அநுபவிக்கலாகாதோ? என்று சிலர் கேட்கக்கூடும்; *பாவி யேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ*; என்னும்படியான இருள் தருமா ஞாலத்திலே அவிச்சிந்நமான அநுபவம் வாய்க்கமாட்டாதே; "ஒருவிச்சேதமும் வாராதபடி ஏகாந்தமா யிருப்பதொரு தேச விசேஷத்திலே கொண்டுபோய்வைத்து அநுபவிக்கவேணும்" என்று பாரித்தான். அதுதானும் கிடந்தானை கண்டேறுமா போலன்றிக்கே ஆழ்வார் நியமித் தருளுகிறபடியே செய்தோமாகவேணும் என்று பாரதந்திரியத்திலும் ருசியுண்டாகப் பெற்றான். ஆழ்வாரோ பாரதந்திரியத்தின் எல்லையிலே நிற்பவர். ஸர்வேச்வரனைத் தாம் நியமிக்கமாட்டாரே. அவனோ கையுமஞ்ஜலியுமாய் நின்று 'ஆழ்வாரே! நியமித்தருளீர்; என்கிறான். ஆழ்வார்க்கோ நியமிக்க வாய் எழவில்லை. பராத்பரனை யிருந்துவைத்து இப்படி நம்பக்கலில் பரதந்திரனாய்த் தாழநிற்கிறானே! இதுவென்!" என்று அந்த சீலகுணத்தையநுபவிக்க விழிந்தாராழ்வார். அநுபவிக்குமிடத்துக் கைவல்யாநுபவம் போலே தனியநுபவம் ரஸிக்கமாட்டாதாகையாலே நால்வரோடேகூடி யநுபவிப்போ மென்று நாட்டார் பக்கலிலே கண் வைத்தார். அவர்கள் உண்டியே உடையே உகந்தோடு வாராய் சப்தாதி விஷயங்களிலே அந்யபரராய் அவற்றோடே பணிபோந்திருந்தார்கள். அவர்களைவிட்டு, பரமரஸிகனான ஸர்வேச்வரனோடுதான் கூடி இக்குணத்தை யநுபவிப்போமேயென்று அவன் மேலும் கண் செலுத்தினார்; அவனோ ஆழ்வாரைக் கொண்டுபோகையிலே விரைந்திருப்பானொருவனாகையாலே அதிலே அந்யபரனாய் ஆழ்வா ருடைய அநுபவத்திற்கு உசாத்துணையாக மாட்டிற்றிலன். இப்படி ஸம்ஸாரிகளும் துணையன்றிக்கே ஸர்வேச்வரனும் துணையன்றிக்கே யானவிடத்து *யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்* என்று முன்னமே சொல்லியிருக்கிறாரே யாழ்வார், தம்மோடு உடன் கேடான நெஞ்சிருக்க இனி என்ன குறையென்று தேறி அந்த நெஞ்சோடே யநுபவிக்கிறார்—நெஞ்சே! அவனுடைய மேன்மையிருந்தபடி கண்டாயே, அப்படி மேன்மையுடையவன் நம்பக்கல் இப்போது தாழநிற்கும்நிலை கண்டாயே; நாம் பெற்ற பேற்றின் கனமிருந்தபடி கண்டாயே! என்று சொல்லிச் சொல்லி உள்குழைகிறாராழ்வார்.

---

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

அடியேனுடைய எழுபத்தாறு பிராயப் பூர்த்தி நினைவுமலராக இரண்டு நூல்கள் எழுதத் தொடங்கினேன். **அருளிச்செயலுவமையெழுபத்தாறு** என்னும் முதல் நூலை யெழுதி முடித்து ஸ்ரீ ராமாநுஜன் 220ல் வெளியிட்டாயிற்று. பிறகு 29—3—67ல் பராபவவத்ஸரபங்குனிவிசாகமலர் என்னும் பெயரால் ஸ்ரீ ராமாநுஜன் விசேஷமலர் வெளியிடப்பட்டது. அதுவும் அன்பர்களுக்குக் கிடைத்திருக்கிறது. உத்தேசித்ததில் இரண்டாவது நூலான **ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு** என்னும் நூல் இப்போது வெளிவருகின்றது. ஒரே ஸஞ்சிகையில் இதனைப் பூர்த்தியாகவே வெளியிட எண்ணி யிருந்தேன். ஆனால் விஷய கௌரவத்திற்குத் தக்கபடி நூல் விரிவடைந்து விட்டது. மூன்று நான்கு ஸஞ்சிகைகளில் பூர்த்தியடைய வேண்டிய நூலை ஒரே ஸஞ்சிகையில் பூர்த்தி செய்வது ஸாத்யமானதன்றே. இப்போது வெளிவருகின்ற இந்த ஸஞ்சிகையோ வைகாசி மாதத்தினுடையது. மேலும் ஆனி ஆடி ஆவணி மாதத்து ஸஞ்சிகைகளை முன்னடியே வெளியிடுவதும் யுக்தமாகத் தோன்றவில்லை. மேல்மாதத்து ஸஞ்சிகைகள்

முன்னுடியே வெளிவந்திருக்கின்றன வென்பதை நோக்காமல் "இம்மாதத்து ஸஞ்சிகை இன்னும் கிடைக்கவில்லையே" என்றெழுதிக்கொண்டே யிருப்பவர்கள் பலர். அவர்களுக்கெல்லாம் விடையெழுதவும் முடிகிறதில்லை. ஆகவே மாதம் கடவாமல் ஸஞ்சிகையை வெளியிட்டு வரவேண்டியது அவசியமாகிறது. போஸ்டு இலாகா நிர்பந்தமும் பரிபாலிக்கப் படவேண்டியதாகிறது. ஆகவே இது முதலாக வரும் ஸஞ்சிகைகளை ஜாக்ரத்தையுடன் காப்பாற்றி வைத்திருந்து **ஸ்ரீபாஷ்யாதிகரணமெழுபத்தாறு** என்கிற ஸ்ரீபாஷ்ய ஸாரஸர்வஸ்வம் பூர்த்தியடைந்தவுடனே ஒன்று சேர்த்து பைண்டு செய்வித்துக் கொள்ளவேண்டியது.

ஸ்ரீ பாஷ்யார்த்தங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுவிட்டதனுல் அவ்வர்த்தங்கள் எல்லார்க்கும் எளிதாகப் புரிந்துவிடுமென்று நினைக்கலாகாது. பாஷாப்ரயுக்தமான கடினத்தன்மை போய்விட்டாலும் விஷயப்ரயுக்தமான கடினத்தன்மை போய்விடாதன்றோ. ஸம்ஸ்க்ருத பாஷையில் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள் அந்த பாண்டித்யத்தையே கொண்டு ஸ்ரீ பாஷ்யார்த்தங்களைத் தெரிந்துகொள்ள முடிகிறதில்லையன்றோ. வேதாந்தார்த்தங்களைப் புரிந்துகொள்வதற்குத் தனிப்பட்ட வ்யுத்பத்தி வேண்டியதாகும். நமது இந்தத் தமிழ் விளக்கத்தினுல் வேதாந்த பரிசயமுள்ளவர்கள் ஸ்ரீபாஷ்ய ப்ரமேயங்களை ஒருவாறு ஸ்தூலமாகத் தெரிந்துகொள்ள முடியுமத்தனை. ❋

## ஸ்ரீமதாண்டவன் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருக்குடந்தை யாண்டவனென்று ப்ரஸித்தராய் விளங்கும் ஸ்வாமியை அறியாதாரில்லை. இந்த ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி மூன்று ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று. அது முதலாகவே திவ்ய தேச ஸஞ்சாரங்கள் நடந்து செய்தருளி ஸமீபகாலத்தில்தான் ஸ்ரீரங்கத்திலுள்ள ஸ்வஸ்தானத்திற்குவந்து சேர்ந்தருளினுர். இந்த ஸ்வாமி திருவவதரித்தருளினது பராபவ ஸூ பங்குனித்திங்களில் புஷ்ய நக்ஷத்திரத்திலாதலால் சென்ற பங்குனி மாதத்திலேயே இந்த ஸ்வாமிக்கு ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் நடைபெறுவதாயிருந்தது. ஆனுல் அப்போது திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்ரீரங்கநாதனுக்குப் பங்குனியுத்தர மஹோத்ஸவம் நடைபெற்றுவந்த படியால் ஸ்வாமியின் திருவவதார நன்னுளில் நம்பெருமாள் வெளியூரில் எழுந்தருளியிருக்க நேருமதுகண்டு அந்த ஸமயத்தில் அங்கு ஸ்வாமிக்கு உத்ஸவம் கொண்டாடுவது உசிதமாக இராதென்று கருதிய சிஷ்ய வர்க்கத்தார் அப்போது இந்த ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவக் கொண்டாட்டத்தை மதுரையில் ஒருவாறு ஸம்க்ஷேபமாக நடத்தி முடித்து நிகழும் ப்லவங்க ஸம்வத்ஸரத்துச் சித்திரை மாதப் புஷ்ய நக்ஷத்திரத்தில் அந்த மஹோத்ஸவக் கொண்டாட்டத்தை விசேஷ வைபவமாக நடத்தினுர்கள். முன்னுடி 10 நாட்கள் உபயவேதபாராயணங்களும் வித்வத்ஸதஸ்ஸும் நடைபெற்றனவாம். அந்த ஸதஸ்ஸில் ஸாக்ஷாத்தாக அந்வயிக்கப் பெருமல் உபந்யாஸ ப்ரேஷணமுகேந அந்வயிக்க விரும்பின அடியேன் நான்கு தமிழுபந்யாஸங்களும் ஒரு ஸம்ஸ்க்ருதோபந்யாஸமும் எழுதியச்சிட்டு ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷித்தருள அனுப்பி வைத்தேன். அவை இப்பத்திரிகையிலும் சேர்க்கப்பட்டுள்ளன. ஸம்ஸ்க்ருதோபந்யாஸம் மட்டும் சில பிரதிகளில் சேர்க்கப்படவில்லை, அது ஸர்வாதிகாரமல்லாமைபற்றி. ❋

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவரங்கம் பெரிய கோயில் பெரியாச்ரமத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருக்குடந்தையாண்டவன் திருமுன்பே

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

# அண்ணங்கராசார்யதாஸனுடைய லிகிதமூல-உபந்யாஸம்

முன்னுரையான விண்ணப்பம். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருக்குடந்தை யாண்டவனுக்கு ஷஷ்டியப்தபூர்த்திக் கொண்டாட்ட மஹோத்ஸவம் ஸமீபித் திருப்பது நாடு நகரமும் நன்கறிந்தது. நாளைப் புஷ்ய நக்ஷத்ரமளவாகப் பத்து நாட்களில் 9-4-67 to 18-4-67 கோயிலில், பெரியாச்ரமத்தில் நிகழப்போகுமிந்த மஹோத்ஸவத்திற்குத் திருவருள் பொலிந்த ஆஹ்வான பத்ரிகை கிடைத்திருக் கின்றது. "குழாங்களாய் அடியீர்! உடன்கூடி நின்றுடுமினோ" என்று ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகளைப் பிரார்த்தித்து அடியேனும் உடனிருந்து அநுபவித்து ஸத்தைபெறக் குதூஹலமுடையவனே. ஆயினும் விதிவசாத் அதற்குரிய தேஹ பாடவமின்மையால் அடியேனுடைய ஸூலபிதங்களை இந்த லிகித மூலமாக [உபய வேதாந்த விஷயமாய்] ஸமர்ப்பித்துக் கொள்ளுகிறேன். ஏறக்குறைய நாற்பது ஸம்வத்ஸரமாக ஸ்ரீ ஸ்வாமியோடு அநந்ய ஸாமாந்யமான ஸௌஹார்தங் கொண்ட அடியேன் இங்கு முக்கியமாக ஒரு விஷயம் விஜ்ஞாபிக்கவேண்டுவது அவர்ஜநீயமாகிறது. நம் ஸ்வாமி உபயவேதாந்தங்களிலும் நல்விரகர். ஆயினும் பகவத் விஷய ஸூவசனங்களில் அஸாதாரணமான அபிநிவேசம் கொண்டவர். த்ராவிட வேதாந்தத்தை வலக்கண்ணாகவும் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தை இடக் கண்ணாகவுங் கொண்டவர். அத்தகைய ஸ்ரீ ஸ்வாமியின் மஹோத்ஸவத்திற்காக நடைபெறும் ஸதஸ்ஸில் உபயவேதாந்த ஸூவசனமும் நடைபெற ஸூாப்தம். அன்றியும் *செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே* என்று துணிந்து பணித்த ஆசார்ய ஸார்வ பௌமரைப் போற்றுங்குடியிற் பிறந்தவர்கள் அந்தப் பாசுரத்தை விளக்கும் வகை யிலே உபந்யஸிக்கவல்ல வித்வான்களைக் கூட்டி உபயவேதாந்த ஸமந்வய ஸம்ஸ்க்ருதங்களான சொற்பொழிவுகளைச் சிறப்புற நடப்பிப்பதே நலம். ஆண்ட வன் திருவுள்ளம் இதனில் மாறுபட்டதன்று. அவரைக் கலந்து கொள்ளாமலே ஆஹ்வாந பத்ரிகை அச்சிடப்பட்டதாக அடியேன் திண்ணமாக வெண்ணுகிறேன்.

"தெளியாத மறை நிலங்கள் இன்னவை; தெளிவித்த செய்ய தமிழ் மாலை கள் இன்னவை" என்று விளங்கக் காட்டி ஆராவமுதமான செவியுணவு அளிக்க வல்ல கலையறக் கற்றமாந்தர் இல்லாமற் போகவில்லை. அருமருந்தான அன்னவர்களை வருவித்து உபந்யஸிக்கச் செய்வது ஸதஸ்ஸுக்கு ஸௌரபாதிசயத்தை யளிக்கு மென்று ஸ்ரீ ஸ்வாமியின் திருவடிவாரத்தில் ஸவிநயம் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். ஆங்காங்கு மடங்களிற்போல் "ஸ்ரீ பாஷ்யத்தில் வாக்யார்த்தம்" என்ற மகுடங்கொண்டு பிஷ்டபேஷணமும் சர்வித சர்வணமும் பண்ணிப் போவ தில் ரஸமிருப்பதாக ஸ்ரீமதாண்டவனும் திருவுள்ளம் பற்றமாட்டாரென்பேன்.

---

# ஆராவமுதனும் ஆழ்வாரும்.

ஆக்ருதம் திருக்குடந்தை யாராவமுதன் விஷயமாக ஒரு வியாஸ மெழுத வேணுமென்று ஸ்ரீ ஸ்வாமி நியமனம் கிடைத்ததனுல் முன்னம் தென்மொழியிலும், பின்பு வடமொழியிலும் அதனை யெழுதி, தமிழ்மாலை கொண்டு மறை நிலங்கள் தெளியும் ஆகாரங்களையும் அடுத்தபடி விவரிப்பேனுக.

உகந்தருளின நிலமென்றுவ்யபதேசிக்கப்படுகிற திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களுக்கு ஒரே விதமான திருநாமமில்லை. விசித்திரமான திருநாமங்கள் அமைந்துள்ளன. அழகிய மணவாளன், திருவேங்கட முடையான், பேரருளாளன், பத்தராவி, வைத்தமாநிதி, குழைக்காதன்; சௌரிப் பெருமாள், பரிமளரங்கன், புருஷோத்தமன், குடமாடுகூத்தன், ஆமருவியப்பன், வயலாலி மணவாளன், மாயக்கூத்தன், தாடாளன் திருநாராயணன் உலகளந்தான்.... என்றிப்படியுள்ள விலக்ஷணமான திருநாமங்களினிடையே ஆராவமுது என்கிற திருநாமம் உண்மையில் ஆராவமுதமாகவே அமைந்துள்ளது. அபர்யாப்தாம்ருதமென்று வடமொழியில் வ்யவஹாரமிருந்தாலும் ஆராவமுது என்னும்போது உண்டாகுமினிமையின் ஏகதேசமும் அதில் உண்டாவதில்லை. 'ஆராவமுதன்' என்பதிற் காட்டிலும் 'ஆராவமுது' என்பது அதிமநோஹரமான வ்யபதேசம். அமலனுதிபிரான் முடிவில் "என்னமுதினைக் கண்டகண்கள்" என்ற சந்தையின் சுவையறியாதார் "என்னமுதனை" என்று ஓதுவர். அதைக் கேட்கும்போது அடியேனுக்கு மிக வெறுப்பும் வெகுளியுமுண்டாகும். ஒரு சேதநவ்யக்தியென்று தோற்றுகைக்காக 'அமுதன்' என்ருலும் அமுது என்னுஞ்சொல்லிலுள்ள இனிமை அப்ரமேயம். 'மருத்துவனுய் நின்ற மாமணிவண்ணு" என்றதிற் காட்டிலும் "மருந்தும் பொருளும் அமுதமுந்தானே" என்பதன்ருே மிகமிக ரஸித்திருப்பது. அடியேன் ஒருவிசை திருக்கண்ணமங்கைக்கு விடைகொண்டிருந்தபோது 'பெருமாள் திருநாமமென்ன? என்று கேட்டேன்; 'ப்ருஹத் பஹிஸ் ஸிந்து நாதன்' என்று செவிபிளக்கச் சொன்னுர் பட்டாசார். திருமங்கையாழ்வார் இத்தலத்திற்குத் திருமொழி தொடங்கும்போதே பெரும்புறக்கடலை என்றருளிச் செய்ததனுல் அதை ஸம்ஸ்க்ருதப்படுத்தி [பெரு—ப்ருஹத், புறம் —பஹி:, கடல்—ஸிந்து என்ருக்கி] வ்யவஹரிக்கத் தொடங்கி விட்டார்களென்று நினைத்தேன். இது பொருத்தமான மொழிபெயர்ப்புமன்று. அடியேன் மலைநாட்டுத் திருப்பதிகள் ஸேவிக்கப்போனபோது திருவண் பரிசாரத்தில் பெருமாள் திருநாமமென்னவென்று கேட்க, 'திருவாழ்மார்பனென்று உங்களாழ்வார் பாடியிருக்கிருரே' என்ருர் அர்ச்சகர். இப்படியே திருச்செங்குன்றூர்த் திருச்சிற்ருற்றில் கேட்டபோது 'இமையவரப்பனென்று உங்களாழ்வார் பாடியிருக்கிருராமே, அதுவேதான் என்ருர். இங்ஙனே பலவிடங்களில் ஆழ்வாருகந்தருளின திருநாமமே வழங்கி வருவதாகக் கண்டேன்.

ஆராவமுதென்கிற திருநாமம் ஏற்கெனவே யிருந்ததை ஆழ்வார் அருளிச் செய்தாரா? அல்லது ஆழ்வாரருளிச் செய்தபிறகே இத்திருநாமம் வழங்கிவரத் தொடங்கியதா? என்று அடியேன் விமர்சித்ததுண்டு. இஙஙனே பல விமர்சங்கள் ப்ராப்தமாக, இவை நமக்கு நிலமல்லவென்று விட்டிட்டேன். வானமாமலையில் பெரிய தடாகத்தைச் சேற்றுத்தாமரையென்று வழங்கி வருவதும், அங்கு ஒரு சோலையைத்தேனமாம்பொழிலென்று வழங்கிவருவதும், திருமோகூரில் ஏரியைத் தாளதாமரை யென்று வழங்கிவருவதும், திருக்குறுங்குடியுள் தடாகத்தைக் கரண்டமாடு பொய்கையென வழங்கிவருவதும் இங்ஙனே மற்றும் பலபலவும் திவ்ய ப்ரபந்தோபஜ்ஞமென்பதில் ஐயமில்லையன்றோ. உலகத்தை ஸாரமாகப் பிரித்தால் ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்று மூவகையாகப பிரியும். ப்ரமாணம்—ஆழ்வாரருளிச் செயல். ப்ரமாதா—அருளிச்செயலை யோதுமவர்கள். ப்ரமேயம்—அவ்வருளிச்செயலால் அநுபவிக்கப்படும் எம்பெருமான்; இம்மூன்று வகுப்பையும் அமுதாகவே ஆழ்வார் அநுபவிக்கிறார். *தொண்டர்க்கமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன்* என்ற திருவாய்மொழியினாலும். *நல்லவமுதம் பரகாலன் பனுவல்களே* என்ற தனியனாலும் ப்ரமாணம் அமுதாகத் தேறிற்று. (*பக்தாம் ருதம்—த்ராவிட வேதஸாகரம்* என்ற ஸ்ரீமந்நாதமுனி ஸ்ரீஸூக்தியையுங் கொள் ளலாம்.) *வைகல் பாடவல்லார் வானோர்க்கு ஆராவமுதே* என்ற ஸ்ரீஸூக்தி யினால் ப்ரமாதாக்கள் அமுதாகத் தேறினார்கள். இனி ப்ரமேயம் திவ்யதேசத் தெம்பெருமான்களாகையாலே அவர்களையும் அமுதாக அநுபவித்த விடங்கள் பல பல. *அண்டர்கோனணியரங்கனென்னமுது* அடியேன் மேவியமர்கின்றவமுதே திருவேங்கடத்தெம்பெருமானே* சோலைமலைக்கரசே கண்ணபுரத்தமுதே! *திரு மெய்யத்தின்னமுத வெள்ளத்தை* அமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே* ஆரா வின்னமுதைத் தென்னழுந்தையில் மன்னிநின்ற* *அமுதத்தினைக் கண்ணமங் கையுள் *.............இங்ஙனே அமுதாக அநுபவித்த விடங்கள் அனேகமிருந் தாலும் அவையெல்லாம் உபபத நிரூபணீயங்களாயிருக்கு மத்தனையே. உபபத நிரபேக்ஷமாய் ஸ்வயமே நிரூபகமாயிருக்கும் திருநாமம் ஆராவமுதென்பதொன் றேயாம். பேரருளாளனென்னுந் திருநாமம் தேவப்பெருமாளுக்கும் திருக்குறுங் குடிப் பெருமாளுக்கும் திருநாங்கூர்ச் செம்பொன்செய்கோயில் பெருமாளுக்கும் வழங்கும். பத்தராவி யென்னும் திருநாமம் நிருநின்றவூர்ப் பெருமாளுக்கும் திருக்கண்ணமங்கைப் பிரானுக்கும் வழங்கும். இங்ஙனே பல காணலாம். ஆராவ முதென்கிற திருநாமம் திருக்குடந்தைப் பெருமானுக்கே அஸாதாரணமாயுள்ளது.

திருக்குடந்தையிலீடுபட்ட ஆழ்வார்கள் பலரெனினும் நம்மாழ்வாருடைய வும் திருமங்கையாழ்வாருடையவும் ஈடுபாடு அதிவிலக்ஷணம். நம்மாழ்வாரீடு பட்டுள்ள திருப்பதிகள் ஒரு முப்பது இருந்தாலும் திருக்குடந்தையிலீடுபாடு அப்ரதிமமென்பதுபற்றிக் கேண்மின். திருவாய்மொழியின் முடிவில் *சூழ்விசும் பணிமுகிற் பதிகம் திருநாட்டிலநுபவத்தைப் பரக்கப்பேசுவது. அங்கு லீலா விபூதியின் நினைவு வருவதற்கே ப்ரஸக்தி கிடையாது. அப்படியிருந்தும் "குடந் தையன் கோவலன் குடியடியார்க்கு—தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர்" என்கிற பாசுரம் மிக வற்புதமாக அவதரித்துள்ளது. அங்குள்ள ஸூரிகள்

இவர்களை உபசரிக்கும்போது "இவர்கள் திருக்குடந்தை யெம்பெருமான் திருக்குணங்களிலே ஸந்தானமாக ஈடுபட்டவர்கள்" என்று சொல்லித் தொடர்ந்து தோத்திரம் செய்ததாகச் சொல்லிற்று. திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை முதலான தலங்கள் கிடக்க, அவற்றையெல்லாம் விட்டுத் திருக்குடந்தையிலீடுபாட்டை யெடுத்துரைத்துத் தோத்திரம் செய்ததாக வருளிச் செய்ததன் காரணம் ஆராயுமளவில், திவ்யப்ரபந்தங்களெல்லாம் லோபித்திருந்த காலத்தில் *ஆராவமுதே யென்கிற பதிகமொன்றுமட்டும் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருச்செவியிலேபட, அதிலிருந்தே நாலாயிரமும் புநரவதாரம் செய்ய ப்ராப்தமாயிற்றென்று ஐதிஹ்யமாகையினலே ஆழ்வார்க்கும் அங்குள்ள ஸூரிகளுக்கும் பவிஷ்யத்ஜ்ஞானமிருந்தே இப்படி பாசுரம் தோன்ற நேர்ந்ததென்பது ரஹஸ்யமருமம், மேலே கோவலன் என்பதிலும் ஒரு மருமமுண்டு. அதன் விவரணம் இங்கு அநபேக்ஷிதமென்று விடுக்கப்படுகிறது. இவ்வாறாக நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தையிலே அபிநிவேசமிருக்கும்படியை யுணர்ந்தே திருமங்கையாழ்வார் ஸ்வப்ரபந்தாரம்பத்திலேயே *சூழ்புனல் குடந்தையே தொழுது* என்றும், *சொற்பொருளாளீர்! சொல்லுகேன் வம்மின் சூழ்புனற் குடந்தையே தொழுமின்* என்று மருளிச்செய்த தன்றியும், சரமப்ரபந்தமான திருநெடுந்தாண்டகத்தை முடித்தருளும் போதும் "தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை யடிநாயேன் நினைந்திட்டேனே" என்று நம்மாழ்வாரைப் போலவே திருக்குடந்தை நினைவாகவே முடித்தருளினர். அடுத்த பாசுரத்தில் ஒரு விசேஷத்தையும் அற்புதமாகக் காட்டி நின்றார். (அதாவது) *அன்னமாய் முனிவரோடு அமரரேத்த அருமறையை வெளிப்படுத்தவம்மான்* என்று, நம்மாழ்வார்க்குத் திருநாட்டில் திருக்குடந்தை நினைவுவருவதற்குறுப்பான ஐதிஹ்யத்தை முத்ராலங்கார ரீதியில் காட்டிவைத்தார். ஆசார்யஹ்ருதயத்தில் "நாதயாமுனர் போல்வாரை அன்னமென்னும்" என்றருளிச் செய்தபடி அன்னமாயும், 'நாதமுனிகள்' என்னலாம்படி முனிவராயுமுள்ள ஸ்ரீமந்நாதமுனிகளோடு கூட [அமரர் ஏத்த] திருக்குருகூரிலுள்ள நிலத்தேவர்களும் துதிக்க. [அருமறையை வெளிப்படுத்த வம்மான்] "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்கிறபடியே அருந்தமிழ் மறையை நம்மாழ்வார் வெளியிட்டருளினபடி காட்டிற்றுயிற்று.

திருமங்கையாழ்வார் சிறிய பெரிய திருமடல்களருளிச்செய்தவர். சிறிய திருமடலிலே தர்மார்த்தகாமங்களென்கிற மூன்று தான் புருஷார்த்தமென்று ஸாதித்து, உடனே மோக்ஷமென்று ஒரு புருஷார்த்த முண்டென்பார் அவிவேகிகளென்று மருளிச்செய்து, அந்த அவிவேகத்தை உபபாதிப்பதாகத் தொடங்கி "ஆராவமுதமங்கெய்தி, அதில் நின்றும் வாராதொழிவ தொன்றுண்டே" என்றருளிய ஸ்ரீஸூக்தி மிகவினிது. இங்கே ஆழ்வாருடைய விவக்ஷிதம் என்னவென்றால், "இங்கேகாண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங் காலையே" என்ற நம்மாழ்வாரருளிச்செயலின்படி இங்கு அர்ச்சாவதாராநுபவத்திற்கு மேற்பட மோக்ஷாநுபவமென்பதே இல்லையாயிருக்க, அங்கே ஆராவமுதமிருப்பதாகவும், அதையே நிரந்தரமநுபவித்துக்கொண்டு இந்நிலத்திற்குத் திரும்பிவருதலின்றியே யிருப்பதாகவும் சொல்லுவது என்ன பேதைமை! ஆராவமுதநுபவம் உண்மையில் இங்கே

யாயிருக்க, அங்கேயென்பது ஒரு அபத்தம்; அப்படியிருந்தாலும், அங்கு அநு பவித்தவாறே அது கசத்துப்போய் உண்மையாக இங்கு அநுபவித்துக்கொண் டிருந்த ஆராவமுதையநுபவிக்கப் பதறியோடி வரவேண்டியிருக்க "நச புநராவர்த் ததே நச புநராவர்த்ததே" என்று மீட்சியில்லையாகச் சொல்லுவது மற்றோர் அஸம் பத்தம். இது நியாயமாகாது. அநல்பமும் ஸாரதமமுமான இந்த போகமெங்கே! அல்பமும் அஸாரமுமான அந்த போகமெங்கே! என்று ஏசுவது இங்குத் திருமங்கை யாழ்வார்க்கு விவக்ஷிதம்.

ஆஸ்திகாக்ரேஸரரான இவ்வாழ்வார் மோக்ஷபுருஷார்த்தத்தை இல்லை செய்வது நியாயமோவென்று சில பரமைகாந்திகள் சங்கிக்கக்கூடும். இங்கு *நஹி நிந்தா நியாயத்தை ஸ்மரிப்பது. அர்ச்சாவதாரப்ரசம்ஸை இங்கு விவக்ஷிதமே யொழிய மோக்ஷதூஷணம் சிறிதும் விவக்ஷிதமன்று. நம்முடைய தைத்திரீய யஜுர்வேதமுங் கூட ஆருவது காண்டத்தின் ஆரம்பத்தில் "கோ ஹி தத் வேத? யத்யமுஷ்மிங் லோகே அஸ்தி வா ந வேதி" என்றோதிவைத்தது. மேலுலகில் ஒன் றுண்டோ இல்லையோ? யார் கண்டார்?' என்பது இந்த வேதவாக்கின் பொருள். இதுவும் நஹிநிந்தாந்யாயத்தினுல்தான் உபபத்தியடையக் கூடியது. திருமங்கை யாழ்வார் அர்ச்சாவதார ப்ரசம்ஸையைக் கருதினர். வேத புருஷன் ஒரு அல்ப ஸுகப்ரசம்ஸையைக் கருதினன். இது நிற்க.

ஆராவமுதமங்கெய்தி யென்கிற சொற்போக்கை நோக்குமிடத்து, பரமபதத் திலே ஆராவமுதம் அநுபவிக்கப் படுவதாகச் சொல்லப்பட்டிருக்கின்றதென்பதும் அதனை இவ்வாழ்வார் மறுக்கின்றாரென்பதும் தெரியவருகின்றதன்றோ. பரம பதத்தில் ஆராவமுதம் அநுபவிக்கப் படுவதாக எங்கு ஓதப்பட்டிருக்கின்றதென்று பார்க்கவேணும். "ரஸோ வை ஸ:; ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி" என்கிற தைத்திரீயோபநிஷத்தைக் கொள்ளலாம். அதில் அமுதமென்கிற சொல் இல்லையே யென்னில்; ச்சாந்தோக்யோபநிஷத்தில் (8-3-4) *ஏததம்ருதம் ஏததபயம் ஏதத் ப்ரஹ்ம* என்றோதப்பட்டுள்ளது. "ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி" என்றது போதுமே. சாரீரக மீமாம்ஸையில் (1-3ல்) ப்ரமிதாதிகரணம், தேவதாதி கரணம், மத்வதிகரணம் என்று முறையே மூன்று அதிகரணங்களுள்ளன. இம் மூன்றதிகரணங்களுள் 'மத்வதிகரணத்தில் *மத்வாதிஷ்வஸம்பவாத் அநதிகாரம் ஜைமிநி:* என்கிற ஸூத்ரத்தைப் பூர்வபக்ஷ ஸூத்ரமாகவும் *பாவம் து பாத ராயணோஸ்தி ஹி* என்கிற ஸூத்ரத்தை ஸித்தாந்த ஸூத்ரமாகவும் வியாஸர் கொண்டிருக்கிறார்; ஆனால் திருமங்கையாழ்வார் திருவுள்ளத்தால் பூர்வபக்ஷ ஸூத்ரந்தான் ஸித்தாந்த ஸூத்ரமாகக் கொள்ளப்பட்டது. இங்கு ஸம்க்ஷேப ருசியால் அதைச் சுருக்கமாக எழுதுகின்றேன். ப்ரஹ்மவித்யைகள் பலவற்றுள் மதுவித்யையுமொன்று. (அஸௌ வா ஆதித்யோ தேவமது.) ஆதித்யனுக்கு அந்தர்யாமியாகையாலே ஆதித்யனைச் சொல்லப்படுகிற பரப்ரஹ்மத்தை மது வாக–அமுதமாக உபாஸித்துப் பேறு பெறுவதில் வஸு முதலான தேவர்களுக்கு அதிகாரமுண்டா இல்லையா? என்று ஸம்சயம் ப்ராப்தமாக, இல்லையென்று பூர்வ பக்ஷம்வர, உண்டென்று ஸித்தாந்தம். (இது வியாஸருடைய மதம்.) பூர்வபக்ஷ ஸூத்ரத்தை ஸித்தாந்த ஸூத்ரமாகவே கொண்டவர் ஆழ்வார். அஸம்பவாத்

என்பதற்கு ஸூத்ரகாராபிமதமான பொருள் வேறு; ஆழ்வார்க்கு அபிமதமான பொருள் வேறு. கடல் கடைகையில் உப்புச்சாறு கிளருவதெப்போதோவென்று கவிழ்தலை யிட்டிருந்து, ஆவியகமே தித்திக்குமமுதமாய் தோளும் தோள்மாலையு மான ஆராவமுதைக் கண்ணெடுத்துங் காணகில்லாத இவர்கள் எம்பெருமானை மதுவாக உபாஸிக்கை அஸம்பாவிதமாகையாலே அதில் இவர்களுக்கு அதிகாரம் கிடையவே கிடையாதென்று திண்ணமாகக் கூறுகின்றாராழ்வார். இந்த அடியே னுடைய உல்லேகம் ஆழ்வாருடைய அந்தரங்கத்தைத் தழுவியது. இப்படி பாஷ்யமுண்டா? தீபமுண்டா? ஸாரமுண்டா? என்கிற கேள்விகளுக்குச் செவி கொடுப்போமல்லோம். ஆக இவ்வளவும் முதல் நாள் விஜ்ஞாபித்ததாகும். (1)

## இரண்டாநாளுபந்யாஸம் — பாசுரத்தின் அநுபவம்.

ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்பாயே*
நீராயலைந்து கரையவுருக்குகின்ற நெடுமாலே*
சீரார்செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை*
ஏரார்கோலந் திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே !

அவ்வோ திவ்யதேசங்களுக்கு அவதரித்துள்ள பதிகங்களை ஒன்றுவிடாமல் பார்க்கலாம்; பதிகம் தொடங்கும்போதே அத்திருப்பதி யெம்பெருமானுடைய திருநாமத்தை வாயாரச் சொல்லி விளிக்கும் பதிகம் வேறு கிடையாது, இஃ தொன்றேயாம். *மாயக்கூத்தா வாமனா!* என்று ஒரு பதிகம் தொடங்குகிறார்; ஆனால் அப்பதிகத்திற்கு ஒரு திவ்யதேசமும் இலக்கன்று. * திருவுக்குந் திருவாகிய செல்வா!* என்று ஒரு திவ்யதேசப் பதிகம் தொடங்குகிறார் கலியன். ஆனால் திருநாமத்தையிட்டு விளிக்கவில்லை. திருக்குடந்தையைப் பாடத் தொடங்கும் போதே ஆராவமுதே யென்று விளிக்குமழகு வாசாமகோசரமன்றோ. முற்பதிகத்தின் முடிவு பாசுரம் "வானோர்க்காராவமுதே" என்று தலைக்கட்டியதனால் அந்தாதித் தொடைக்குச் சேர "ஆராவமுதே" என்று தொடங்கவேண்டிற்று என்பார் அரஸிகர்கள். பெரியாழ்வார் "அடைக்காய் திருத்திநான் வைத்தேன்" என்று முடித்து *வண்ணப்பவள மென்று தொடங்கவில்லையா? நம்மாழ்வார் தாமே *விண்ணப்பமேயென்று முடித்து* செழுநீர்த் தடத்தென்று தொடங்கவில்லையா? இவ்விடங்களில் அந்தாதித் தொடை எங்கே?

[ஆராவமுதே.] எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பயக்காத அம்ருதமே! என்று பொருள். இங்கு அநுபோக்தாக்கள் யார்? என்று கேள்விபிறக்க ப்ர ஸக்தியேயில்லை. பக்தர்களைத் தவிர வேறு யார் அநுபவிக்கப் போகிறார்? பக்தர் களுக்கு ஆராதவமுதமே! என்று தானே பொருளாகும். ஆனால் ஆறாயிரப்படியில் திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச் செய்வது அது வொரு ஆராவமுத மென்னலாம்படியுள்ளது; "உன்னோடு பிறரோடு வாசியின்றியே எல்லார்க்கு மொக்க ஸர்வகாலமும் அநுபவித்தாலும் ஆராத போக்யமே!" என்றார் பிள்ளான். இதை நம்பிள்ளையீடு மிக ரஸிப்பிக்கின்றது. எம்பெருமான் தன்னுடைய போக்ய தையைத் தானே யநுபவித்துக் குமிழ்நீருண்பனும். ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்திகள் கொண்டும் பாதுகாஸஹஸ்ர ஸ்ரீஸூக்தியொன்று கொண்டும் இதை மூதலிக்கிறேன். சக்ரவர்த்தி திருமகனார் வேறு, திருவரங்கம் பெரிய

கோயிற் பெருமாள் வேறு என்பதில்லையன்றே. மநுகுலமஹீபாலபரம்பரையில் ஆராத்ய தேவதையாக வந்தவரும், பட்டாபிஷேக ஸமயத்தில் ஸ்ரீவிபீஷணாழ் வானுக்குப் பரிசளிக்கப்பட்டவரும், அத்யாபி கோயிலில் ஸேவைஸாதிப்பவருமான பெருமாளும் நாராயணன்; ஆளிட்டந்தி தொழாதே ஸாக்ஷாத் ஸ்வயமேவ ஆரா தித்த பெருமாளும் நாராயணன். தன்னைத் தானே ஆராதித்துக் கொள்வது தகுதியோ? என்று கேள்வி வரும். இதற்கு பட்டர் அருளிச் செய்கிறார்—[ஸ்வய மத விபோ! ஸ்வேந ஸ்ரீரங்கதாமநி மைதிலீரமணவபுஷா ஸ்வார்ஹாண்யாராதநாநி அஸிலம்பித:]தம்முடைய போக்யதையைத் தாமே அறிபவராய், அது பிறர்க்கு நிலமல்லாமையினாலே தம்மைத் தாமே ஆராதிக்கவேணுமென்று ஆளிடாமல் ஆராதித்தாராயிற்று. நம்பெருமாள் தம்முடைய போக்யதையிலே தாமே (தாமும்) ஈடுபட்டவரென்பதை [அக்ரே தார்க்ஷ்யேண பச்சாத் அஹிபதி சயநேந ஆத்மநா பார்ச்வயோச்ச ஸ்ரீபூமிப்யா மத்ருப்த்யா நயந சுலகனைஸ் ஸேவ்யமாநாம்ருதௌகம்] உத்ஸவ மூர்த்தியாகிய நம்பெருமாள் தம்முடைய முன்னழகையும், 'முன்னிலும் பின்னழகிய பெருமாள்!' என்றேத்தும்படியான பின்னழகையும் இரு பக்கங்களினழ கையும் கண்டுகளிக்கக் குதுகலித்து எதிரே பெரிய திருவடியான வடிவத்தையும், பின்னே* அரவணைமேல் பள்ளிகொண்ட முகில் வண்ணனான வடிவத்தையும், இருப்பக்கங்களிலும் ஸ்ரீ பூதேவிகளான வடிவத்தையுங்கொண்டு அநுபவித்தும் த்ருப்தி பெறாதே யிருக்கும்படியைச் சொன்னாராயிற்று.

பாதுகாஸஹஸ்ரத்தில் "மநுஜத்வதிரோஹிதேந சக்யே வபுஷைகேந விரோதி நாம் நிராஸே, அபஜத் பரதாதிபேத மீசஸ் ஸ்வயமாராதயிதும் ஹி பாதுகே! த்வாம்." இராமன் மத்ஸ்ய கூர்ம வராஹ நரஸிம்ஹாத்யவதாரங்களிற் போல தானொரு வனாகவே அவதரித்துக் காரியம் நிறைவேற்றியிருக்கலாம்; அங்ஙனன்றிக்கே பரதாதிகளாகவும் தன்னை வகுத்துக் கொண்டு திருவவதரித்தது எதற்காக வென் னில், தனக்கும் பரம போக்யமான தன்னுடைய பாதுகையைத் தானே ஆராதிக்க வேணுமென்று தனக்கு ஆசையுண்டாயிற்று; தானே ஸாக்ஷாத்தாக ஆராதித்தால் உலகம் ஏசுமே யென்று தம்பியாக வேற்றுருக் கொண்டு ஆராதித்தபடி என்பது இந்த சுலோகத்தின் கருத்து. ஆக பிறர்க்குப் போலவே தனக்கும் ஸ்ப்ருஹணீய மாயிருக்கும்படியை உபபாதித்தோமானோம். தனக்கு மாராதவமுதமென்கை.

ஆராவமுதே யென்று எடுத்து ஈட்டில் ஓர் ஐதிஹ்யம் அருளிச் செய்யப் படுகிறது; "உத்தர பூமியிலே லோகஸாரங்க மஹாமுனிகள் வர்த்தியா நிற்க, இங்குத்தையானொருவன் அங்கேறச் செல்ல, 'பிள்ளாய்! தக்ஷிண பூமியில் விசேஷமென்?' என்று கேட்க, 'திருவாய்மொழி யென்றொரு ப்ரபந்தமவதரித்து சிஷ்டர்கள் பரிக்ரஹித்துப் போரக் கொண்டாடிக்கொடு போரா நின்றார்கள்' என்ன, 'அதிலே உனக்குப் போவதொரு சந்தையைச் சொல்லிக்காணாய்' என்ன, 'ஆராவமுதே யென்கிற இத்தனையும் எனக்குப் போம்' என்ன, 'நாராயணாதி நாமங் கள் கிடக்க, இங்ஙனேயுமொரு நிர்தேசமுண்டாவதே! இச்சொல்லு நடையாடு கிற தேசத்தேறப் போவோம்' என்று அப்போதே புறப்பட்டுப் போந்தார்."

[அடியேனுடலம் நின்பால் அன்பாயே] இங்கு அடியேனுடலம் என்று சொல்லி யாக வேண்டிய அவசியமில்லை; என்னுடலம் என்றும் சொல்லலாம்; "என்னை

நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னை'' இத்யாதிகள் பலவுண்டே; ஆயினும் இங்கு அடியேனென்றது ஸ்வரூபஸித்தமான அடிமையையிட்டுச் சொன்னதன்று; போக்யதையிலே யீடுபட்டு நெஞ்சுபறியுண்டு சொல்லுகிறதென்னலாம். இதற்குமேல் 'உடலம் நின்பால் அன்பாயே' என்றது சால விசித்திரம். அன்பு என்பது ஆத்மாவின் தர்மமேயொழிய உடலின் தருமமன்று. ''உடலம் ஆத்ம தர்மங் கொள்ள'' என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தி இங்கே நினைக்கத்தக்கது. இது ஆத்ம தர்மம், இது தேஹதர்மம் என்று பகுக்க வொண்ணாதபடி யாயிற்று. ஆத்மாவின் தர்மமான சேஷத்வம் எப்படி உடலினால் பிரகாசமடைகின்றதோ, அப்படியே ஆத்ம தர்மமான அன்பும் உடலில்தானே விளக்கமுறும். வடிவிலே தொடைகொள்ளலாம்படி யிருக்குமாயிற்று ஆழ்வாருடைய அன்புதான்.

[நீராயலைந்து கரைய வுருக்குகின்ற] நீர்ப்பண்டமாக்குவது அலையச் செய்வது கரையச் செய்வது உருகச் செய்வது ஆகிய இவையெல்லாம் பாசுரம் பாடும்போதன்று. இந்நிலைமைகளில் வாய்திறந்து பாடமுடியாதன்றோ. அவ்வோ நிலைமைகளை யடைந்து கிடந்து பேசமுடியாமே சிறிது போதிருந்து பின்னை தேறித் தெளிந்து ஒருவாறு பேசுகிறபடி. (இவ்விடத்திலே அநுபவிக்க வேண்டியது மிக மிகவுண்டு; விரிவுக்கஞ்சி விடப்பட்டது).

[நெடுமாலே!.] "மாலே கருமை பெருமை மையலுமாம்" என்ற நிகண்டின்படி மாலென்பதற்கு மூன்று பொருள்களுள்ளன—கரியவன் பெரியவன், பித்தன் என்று.*முகிலுருவமெம்மடிகளுருவந்தானே* என்று பேசப்பட்ட பெருமானுடைய கருமையைப் பன்னியுரைக்க வேணுமோ? ஸ்வாமி தத்வமுக்தா கலாபமங்கள ச்லோகத்தை மிக வற்புதமாக அமைத்தருளினர். (அதாவது) *லக்ஷ்மீ நேத்ரோத்பல ஸ்ரீஸதத பரிசயாத் ஏஷ ஸம்வர்த்தமாந: நாபீ நாளீகரிங்கந் மதுகரபடலீ தத்த ஹஸ்தாவலம்ப:, அஸ்மாகம் ஸம்பதோகாந் அவிரல துலஸீதாம ஸஞ்ஜாதபூமா காலிந்தீகாந்திஹாரீ கலயது வபுஷ: காலிமா கைடபாரே:* என்பதது. 'கரியதிருமேனியனான எம்பெருமான் நமக்கு நன்மைகளை நல்க வேணும்' என்று சொல்ல வேண்டியிருக்க, அங்ஙனம் சொல்லாது 'எம்பெருமானது திருமேனியின் கறுப்பு நமக்கு நன்மைகளை நல்கவேணும்' என்று சொல்லியிருப்பது விலக்ஷணமான உக்தி சமத்காரம். ஸம்பத் ப்ரதானத்திற்கு உண்மையில் எம்பெருமானே கர்த்தாவாயிருக்க அவனைத் தவிர்த்து அவனது திருமேனியின் கருமையைக் கர்த்தாவாக்கினது அந்தத் திருநிறத்தில் ஸ்வாமிக்குண்டான அபிநிவேசத்தை விளக்கி நிற்கும். அந்தக் கரு



நிறம் எம்பெருமானுடைய திருமேனியிலே பிறந்ததென்பதை மட்டுமே நாம் அறிவோம். அது வளர்ந்தவாற்றை ஸ்வாமியொருவரே கண்டறிந்துகூறவல்லவர். ஆச்சரியமாகக் கூறியுள்ளார். [லக்ஷ்மீநேத்ரோத்பல ஸ்ரீஸததபரிசயாத்ஸம்வர்த்தமாந:] *அஸிதேக்ஷணா* என்றும் *மையார்கருங்கண்ணி யென்றும் ப்ரஸித்திபெற்ற பெரிய பிராட்டியாரின் திருக்கண்ணோக்கங்கள் அனவரதமும் திருமேனியிலுறைப் பதனாலான வளர்ச்சி யொன்று பட்டர்ஸ்ரீ குணரத்னகோசத்தில் *அபாங்கா பூயாம் ஸோ யதுபரி பரம்-ப்ரஹ்ம தத பூத்* என்று, பிராட்டியின் கடைக்கண்ணோக்கங்கள் அதிகமாக விழுமிடம் எதுவோ அதுதான் பரப்ரஹ்மமாயிற்று என்று கூறியுள்ளதற் கேற்ப பிராட்டியின் கருங்கண்ணோக்கங்கள் அவிச்சின்னமாகப் பாய்ந்து கொண் டிருக்குமே; அத்திருக்கண்களின் கருமையினால் வளர்ந்தது எம்பிரான் திரு மேனியின் கருமை. [இடையில் ஒரு சிறு விண்ணப்பம். அடியேன் இளமையில் *லக்ஷ்மீநேத்ரோத்பலஸ்ரீ........* என்னுமிந்த சுலோகத்தைத் தமிழ்ச் செய்யுளாக மொழிபெயர்த்து ஒரு பெரியாரிடம் பரிசுபெற்றேன் அந்தச் செய்யுளின் முதலடி மட்டுமே நினைவிலுள்ளது; ''கமலைமாமாதின் குவளை யொண்மலரேய் கண்களிற் காட்சியாற் கிளர்ந்து'' என்பதாக. மற்றையடிகளை இப்போதியற்றினால் விரஸமாம்.

[நாபீநாலீகரிங்கந் மதுகர படலீதத்த ஹஸ்தாவலம்ப:] திருநாபிக்கமலத்தில் மதுவைப் பருகச் சுழலமிடும் வண்டினங்களின் கருமையும் திருமேனியின் கருமை வளரக் கை கொடுத்துவிட்டது [அவிரலதுலஸீதாமஸஞ்ஜாதபூமா] *தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந் துழாயுடையையாலே அத்துழாயலங்கலின் பசுமை பச்சைமாமலைபோல்மேனிக்குப் புகரூட்டிற்று. பசுமையும் கருமையும் பரியாயமாகக் கொள்ளப்படும். [காலிந்தீ காந்திஹாரீ] இவ்வளவுக்கும் மேலாகத் *தூயபெருநீர்யமுனைத் துறைவனுகை யாலே அந்தநதியின் கருமையும் கலந்து கனத்ததாயிற்று மேனியின் கருமை. ஆக *லக்ஷ்மீநேத்ரோத் பலஸ்ரீயாலும் நாபீகமல ஸஞ்சரச் சஞ்சரீக ஸங்கத்தாலும் திருமேனியெங்குமடர்ந்து விளங்கும் திருத்துழாய் மாலையின் சேர்க்கையினாலும் காளிந்தீ நதியின் காந்திச் செறிவினாலும் மிக்க மேம்பாடுற்ற கருநிறமுடைமை பற்றி நெடுமாலே! என்றாராயிற்று.

கருமைக்கடுத்த பொருள் பெருமையாகையாலே அதன் விவரணம் கேளீர். வேதாந்தங்களில் ப்ரஹ்ம என்று ஓதப்படுபவன் எம்பெருமான். ஸ்ரீபாஷ்யோப க்ரமத்தில் ப்ரஹ்ம சப்தார்த்தமருளிச் செய்யாநின்ற எம்பெருமானார்—''ஸர்வத்ர ப்ருஹத்த்வகுணயோகேந ஹி ப்ரஹ்மசப்த:; ப்ருஹத்த்வஞ்ச ஸ்வரூபேண குணைச்ச யத்ர அநவதிகாதிசயம். ஸோஸ்ய முக்க்யோர்த்த:'' என்று பணித்தார். இதன் கருத்தாவது, உலகில் உருவத்தால் பெருமை பெற்ற வஸ்துக்களை பெரிய மண்டபம், பெரிய தடாகம், பெரியமலை என்கிறோம். உருவம் சிறுத்திருந்தாலும் குணங்கள்பெருத்திருக்கப் பெற்றவர்களைப் பெரியாரென்கிறோம். *மஹதோ மஹீயாந்* என்னப்பட்ட எம்பெருமான் உருவத்தாலும் பெரியவன், திருக்குணங் களினாலும்பெரியவன். *வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* *அஹம் வேத்மி மஹாத்மாநம்* இத்யாதி.

இனி, மாலுக்கு மூன்ருவது பொருள் பித்தனென்பது. தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் *இத்தனையடியரானர்க்கு இரங்குநம் அரங்கனுய பித்தன்* என்கிருர். எம்பெருமான் அடியார்கள் பக்கலில் கொண்டிருக்கும் பித்து வாசாமகோசாம். தான் பேயனுயிருந்து. தன்னேடு கலந்தாரையும் "மையல் கொண்டொழிந்தேன்– மாலெழுந் தொழிந்தேன்– நன்ருரணன் நரகாந்தகன் பித்தன்– வன்பேய்முலையுண்டவாயன்றன் உன்மத்தன்-அந்தாமரைப் பேதைமாமணவாளன்றன்பித்தன்–அரங்கநகரெம்பிரானுக் கெழுமையும் பித்தன்-பித்தனுயொழிந்தேனெம்பிரானுக்கே- பேயனுயொழிந்தேனெம்பிரானுக்கே" என்று வாய்வெருவப் பண்ணுவன். *பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு* என்னும்படி பிராட்டிபக்கலில் பித்தனுயிருப்பதில் வியப்பில்லை; *வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னில்முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினுன்* என்னும்படி ஆழ்வார்திறத்தும் அவருடைய அநுபந்திகள் திறத்தும் பித்தனுயிருப்பதுண்டே இந்தப் பித்தே அவனுக்கு நிரூபகமென்பர் பரமார்த்தவேதிகள். "பித்தன்பித்து" என்று மகுடமிட்டு எழுதத் தொடங்கினுல் ஒரு ராமாயணமும் பாரதமுமாகப் பெருகுமே. இனி மேலே செல்லுகிறேன்.

[சீரார் செங்நெல் கவரிவீசும்] பெரியாழ்வார் வரப்புவழியே கோயிலுக் கெழுந்தருளினபோது கண்ணுற்கண்ட காட்சியைப் பாடினுர்—* உரம்பெற்ற மலர்க்கமலம் உலகளந்த சேவடிபோலுயர்ந்து காட்ட, வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள் சாய்த்துத் தலைவணக்கும் தண்ணரங்கமே * என்ருர். பயிர்கள் பால்கட்டுவதற்கு முன்னே வணங்காமல் வானத்தை நோக்கியிருக்கும்; பால்கட்டிக் கதிர் முற்றினவாறே தழைந்து கொடுக்கும்; அதுபோல, கல்வி ஏறப்பெருதவர்கள் 'அஹமேவ பண்டித:' என்று வணங்கா முடிகளாய் மார்பு நெறித்துக் கிடப்பர்கள்; நன்ருகக் கல்வி முற்றினவர்கள் "நமந்தி ஸந்தஸ் த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம்' என்ற கணக்கிலே விநயமே வடிவெடுத்திருப்பர்கள். இவர்கள் தாம் மேலே சென்று "அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்" என்னுமவர்களாகையாலே இவர்களைச் சீரார் செந்நெலாகச் சொல்லத்தகும். அன்றிக்கே ஆராவமுதப் பெருமாளுக்கு அமுதுபடியாகும் சீர்மையைக்கொண்டு, பெருமாளுக்குப் பட்டாவான நிலங்களில் செந்நெற்கள் கவரி வீசும்படியை யருளிச்செய்கிருராழ்வாரென்று நம்பிள்ளை இன்சுவைப்பொருள் பணிக்கும்படி. அர்ச்சாவதாரப் பெருமாள்களுக்கு செல்வம் மிக்க பக்தர்கள் எத்தனை தளிகைகள் ஸமர்ப்பித்தாலும் ஸ்ரீ பண்டாரத்தளிகை இல்லையானுல் பெருமாள் திருவுள்ள முகவாதென்பது உடையவர் காலத்து இதிஹாஸ விசேஷத்தாலே ப்ரஸித்தம். அந்த ஸ்ரீ பண்டார ஸம்ருத்தியேயாயிற்று இங்குச் *சீரார் செந்நெல் கவரிவீசுமென்று வருணிக்கப்படுகிறது.

[செழுநீர்த் திருக்குடந்தை] ஆழ்வார் நீராயலைய அந்த நீர் ஊரெல்லாம் வெள்ளமிட்டுச் செழுநீர்த் திருக்குடந்தையாயிற்றுப் போலும். உள்ளுக் கிடக்கும் பெருமானே நீர்புரைவண்ணன்; ஆழ்வாரோ நீராயலைந்து கரைபவர்; பாசுரமோ * ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகுமே * என்கிறபடியே நீராயுருக்குமது. பாசுரமோதுமவர்களோ "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகா நிற்பர் நீராயே' என்னும்படி நீராயுருகுமவர்கள். இத்தனை நீரும் சேர்ந்தால் செழுநீர்த்திருக்குடந்தையாகக் கேட்கவேணுமோ?

[ஏரார்கோலம் திகழக் கிடந்தாய்] *கௌஸல்யா ஸுப்ரஜா ராம!* என்று கிடையழகிலே யீடுபட்ட கௌசிக முனிவன் *உத்திஷ்ட நரசார்தூல!* என்றவாறே எழுந்திருந்ததில் வியப்பில்லை; எங்களிலே யொருவர் [திருமழிசைப்பிரான்] "எழுந்திருந்து பேசு" என்றவாறே அர்ச்சாவதார ஸமாதியையுங் குலைத்துக் கொண்டு எழுந்திருக்கப் புக்காயே! இஃதென்ன நீர்மை'.] திருமழிசைப் பிரானுக்காக எழுந்தானென்கிற ஐதிஹ்யம் பிற்காலத்தவர்களான நாம் சொல்லிவருவதேயொழிய ஆழ்வார் ஸ்ரீஸூக்தி ஸித்தமோ வென்று சிலர் கேட்பதுண்டு; இப்பதிகந்தன்னிலே மேலே "அசைவிலுலகம் பரவக் கிடந்தாய்" என்றது அதை நன்றாகத் தெரிவித்தபடியாகும். அசைவு— முன்னடியில் *திசைவில் வீசும் செழுமா மணிகளாகச் சொல்லப்பட்ட திருமழிசைப்பிரானுக்காக அசைந்து கொடுத்தது; அதிலே உலகம் பரவக்கிடந்தாய்—அந்த நீர்மைக்கு உலகமெல்லாமீடுபடுமாறு கிடந்தாய் என்றபடி.] [கண்டேனெம்மானே!] உன்னுடைய கிடையழகு நிரந்தரம் கண்டு கொண்டிருக்கத் தக்கதாயிருக்க, சித்ரகூட பரிஸரத்திலே "ஸ மயா போதித: ஸ்ரீமாந் ஸுகஸுப்த:" என்னும்படி யுணர்த்திவிட்டுத் துடித்த பிராட்டியைப் போலன்றிக்கே கண்ணாரக்கண்டு களிக்கின்றேன்காண் என்றாராயிற்று. (2)

---

## ** மூன்றாநாளுபந்யாஸம்—ஆராவமுதும் அர்த்தபஞ்சகமும் **

*அநந்தபாரம் பஹு வேதிதவ்யம்* என்கிறபடியே அபரிமிதங்களான சாஸ்த்ரங்களில் நாம் அறியவேண்டிய பொருள்கள் அளவுகடந்திருந்தாலும் அர்த்தபஞ்சகமே அறியப் போதுமானதென்பர் நம் ஆசாரியர்கள். ரஹஸ்யங்களோ ஸ்ரீராமாயண ஸ்ரீ விஷ்ணுபுராண பகவத்கீதாதிகளோ எதையெடுத்துக் கொண்டாலும் எல்லாவற்றுக்கும் அர்த்தபஞ்சகமே விஷயமென்பர் மாஞானிகள். ஹாரீதஸம்ஹிதையில் *ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச் ச ப்ரத்யகாத்மந:, ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதி ச; வதந்தி ஸகலா வேதாஸ் ஸேதிஹாஸபுராணகா:, முநயச் ச மஹாத்மாநோ வேத வேதார்த்த தர்சிந:.* என்றுள்ளவசனம் நம்முடைய ஆசாரியர்களனைவரும் கையாண்டது. பரப்ரஹ்மஸ்வரூபம், ஜீவாத்மஸ்வரூபம், எம்பெருமானைப் பெறுவிக்குபாயத்தின் ஸ்வரூபம், பெற்று அநுபவிக்கும் புருஷார்த்தத்தின் ஸ்வரூபம், பெறவொட்டாமல் தடைசெய்யும் விரோதியின் ஸ்வரூபம்—ஆகிய இவ்வைந்துமே அர்த்தபஞ்சகமெனப்படும். இதனையே ஸகலக்ரந்த ப்ருந்தங்களும் ஸம்க்ஷேபவிஸ்தரங்களாலே தெரிவிப்பனவாகும்.

மேலெடுத்த ப்ரமாண சுலோகத்தில் *ஸேதிஹாஸ புராணகா:* என்று சொல்லியானபிறகு *முநயச் ச மஹாத்மாந:* என்று சொல்லியிருப்பது ஆழ்வார்களைக் கருதியே யென்னத் தட்டில்லை. இதிஹாஸ புராண ப்ரணேதாக்களில் வேறுபட்ட முனிகளும் மஹாத்மாக்களும் ஆழ்வார்களேயன்றோ. நிற்க. திருவாய்மொழித் தனியன்களில் ஈற்றதான *மிக்கவிறை நிலையும் மெய்யா முயிர்நிலையும், தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதுங் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்' என்னும் வெண்பாவானது—திருவாய்மொழி யாயிரமும் அர்த்தபஞ்சகத்தையே பன்னியுரைப்பதென்று பகர்ந்தது ஆசார்யஹ்ருதயத்தில் "உயர்திண்ணணையொன்று, பயிலேறுகண்கரு, வீடு

சொன்னுலொருக்கொண்ட, நோற்ற நாலும், எம்மா வொழிவில் நெடுவே யென்கிற இருபதிலே விசதமாக்கி யெண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும்'' என்றருளிச்செய்த கட்டளை யொன்றுளது. ஆக்ருதம் ஆராவமுதே யென்கிற ஒரு பதிகத்தினுள்ளே அர்த்தபஞ்சகமும் ஸாரமாகக் காணலாம்படி யிருக்கையை விளக்கமாக நிரூபிக்கிறேனிங்கு.

1. ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் = பரமப்ராப்யமான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூப நிருபணம் கேண்மின். எம்பெருமானைப் பற்றின வாசகங்கள் பாட்டுத் தோறு மிருப்பதனுல் அவையெல்லாம் ஆப்யஸ்வரூப ஆதிபாதகங்களே யானுலும் ஒரு சந்தையை முக்கியமாகக் கொள்வோமிதற்கு. இரண்டாம் பாட்டில் இரண்டாமடி = *எம்மாவுருவும் வேண்டுமாற்றுலாவாய் எழிலேறே!* = எம்பெருமானுக்கு விக்ரஹமில்லை, ரூபமில்லை என்பர் பிறர். *இச்சாக்ருஹீதாபிமதோரு தேஹ:* என்று பராசரமுனிவர் பணித்தபடி தன்னுடைய இச்சைக்கும் தமருடைய இச்சைக்கும் தகுதியாக எப்படிப்பட்ட வுருவங்களையும் ஏற்றுக்கொண்டு பிறந்தருள்பவன். அப்படி பிறக்கச் செய்தேயும் [எழிலேறே] * ஸ உ ச்ரேயந் பவதி ஜாயமாந:* என்கிற படியே பிறப்பதுதான் கருமமடியாக வன்றிக்கே அநுக்ரஹமடியாகப் பரார்த்தமாகையாலே பிறக்கப் பிறக்க ஒளிமல்கியிருக்குமத்தனை. 'நம்மைப்போலே அவனும் பிறக்கிருன், காரணம் எதுவானுலென்ன?' என்று கற்றன பேசாதே பிறந்தவாறும்! என்று மோஹிக்கும்படியான பிறவியுடைமைதான் ஜ்ஞாதவ்ய ப்ரஹ்மஸ்வரூபத்தில் தலையானது.

2. ப்ராப்துச் ச ப்ரத்யகாத்மந:—எம்பெருமானை யடைந்து உய்வுபெறவேண்டியவனுன ஜீவாத்மாவின் ஸ்வரூபமேதென்னில்; ஆராவமுதே! என்ற வுடனே அடியேனென்றது குறிக்கொள்ளத் தக்கது. சாரீரக மீமாம்ஸையில் ஜீவாத்மஸ்வரூபத்தைச் சொல்லவந்த ஜ்ஞாதிகரணம் ஆத்மாவை ஜ்ஞாதாவென்று இவ்வளவே சொல்லிற்று. ''ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிருபகம்'' என்று ஆசார்யகோஷ்டியில் அர்த்தவிசேஷம் அவதரித்தது. இது ஆழ்வாரருளிச்செயலையே மூலமாகக் கொண்டதென்னுமிடம் ஸ்ரீ வசநபூஷணதிகளில் ப்ரஸித்தம். திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே கூரத்தாழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதியாகப் பெற்றுவந்த அர்த்தமிது – என்பதும் ஸுப்ரஸித்தம். ஆனதுபற்றியே ஸ்வாமி யெம்பெருமானுர் கீதாபாஷ்யத்தில் ஜ்ஞாநீ எனவருமிடங்களில் (விஷ்ணுதத்வவித் ஜ்ஞாநீ என்றெழுதின சங்கராசார்யரைப் போலன்றிக்கே) ''பகவச்சேஷதைகரஸ ஆத்மஸ்வரூபவித்'' என்று பலகாலுமருளிச்செய்தார். *தாஸ பூதா: ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:... ஆத்மதாஸ்யம் ஹரேஸ் ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர* இத்யாதி ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களாலும் அநுக்ருஹீதமான அர்த்தமேயிது. இது தன்னை ஆழ்வார் இப்பதிகத்தில் உபக்ரமத்திலேயே அருளிச்செய்தாராயிற்று அடியேனென்று. மேல் மூன்றும் பாட்டிலும் *கன்னர் மதிள்சூழ் குடந்தைக் கிடந்தாய் அடியேனரு* என்றருளிச்செய்கிருர். இங்கு அரு என்றது அரூபியென்றபடி. ரூபரஹிதனை ஆத்மாவுக்கு வாசகமான சொல் இது. என்னுடைய ஆத்மா உள்ள காலமெல்லாம் உன் திருவடிகளைப் பிரியாதே யிருக்கும்படி பார்த்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறது இங்கு. 'என்னுடைய ஆத்மா' என்பது பொருந்தா

தாகையாலே 'நாஞகிய ஆத்மா' என்றே பொருள் கொள்ளவேணும் சிலாபிம்பஸ்ய சரீரமிதிவத். ஆக, அடியேனென்பதை ஆத்மாவின் பெயராகவே விவக்ஷித்து "அடியேனரு" என்றருளிச் செய்தாரென்று மருமமுணரவேணும். இவ்வளவால் ப்ராப்து : ப்ரத்யகாத்மந : ஸ்வரூபத்தை விவரித்தோமாஞேம்.

3. ப்ராப்த்யுபாயம். பகவத் ப்ராப்திக்கு உபாயமாக சாஸ்த்ரங்களில் பல பலவும் சொல்லிற்று. *சரணுகதி யென்னும் சார்வுடன் மற்றொன்றை அரணுகக் கொள்ளாதாரன்பு வாழி* என்னுமவர்களுக்கு எம்பெருமானைத் தவிர்த்து வேறெதுவும் உபாயமன்று. *ஸ்வப்ராப்தேஸ் ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்ய மாண: ச்ருதௌ* என்றும் *உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவாந்* என்றும் நிகமாந்தமஹாகுரு நிலையிட்ட அர்த்தமிது. இது தன்னை இப்பதிகத்தில் *கழல்களவையே சரணுகக் கொண்ட குருகூர்ச்சடகோபன்* என்று இலச்சினை யிட்டுவைத்தாராழ்வார். இது நிற்க. மூன்ரும்பாட்டில் *உன்ஞலல்லால் யாவராலுமொன்றுங் குறைவேண்டேன்* என்றது ஸாரதமமான வார்த்தை. இங்கு ஆருயிரப்படியில் பிள்ளானருளிச் செய்வது—"என்னுடைய யத்நத்தாலே உன் திருவடிகளைப் பெறக்கடவதாகவோ பார்த்தருளுகிறது? உன்னுடைய க்ருபையாலே உன் திருவடிகளைப் பெறுகையொழிய வேரேருபாயத்தால் பெறிலும் வேண்டா'' என்பது. இங்கு யாவராலு மென்று சேதநஸமாதியாலே சொன்னதித்தனை. வேறு எந்த உபாயத்தாலும் என்பதே பொருளென்று பிள்ளான் விளக்கியருளினபடி. இத்தனைக்கும் தலையாக 'என்ஞன் செய்கேன்' என்கிற ஸ்ரீஸூக்தி அமைந்துளது. இரண்டாம் பாட்டின் முடிவில் 'என்ஞன் செய்கேனே' என்று ஒருவிசை சொல்லி, மறுபடியும் மூன்ரும் பாட்டையும் என்ஞன் செய்கேன்' என்றே உபக்ரமிக்கிரூர். இங்கு எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் ஸம்வாதம் கேளீர்; எம்பெருமான் ஆழ்வார் தம்முடைய ஆர்த்திகண்டு இரங்கக் காணுமையாலே தன்னைப் பெறுமிடத்தில் சில ஸாதனங்களை யனுஷ்டிக்கவேணுமென்று அவன் இருந்தான்போலுமென்று கொண்டு உபாயாந்தரங்களை யநுஷ்டிப்பதற்கு யோக்யதையில்லாதபடி அஜ்ஞுயிருக்கிற நான் எதைச் செய்வேன் என்ரூர். (எம்பெருமான்) ஆழ்வீர்! நான் உமக்கு ஞானத்தையருளியிருக்க இங்ஙனே சொல்லலாமோ? (ஆழ்வார்) என்ஞன் செய்கேன்=நீ தந்த ஜ்ஞானத்தாலே ஸ்வரூப பாரதந்த்ர்யத்தை யுணர்ந்து ஸாதநாநுஷ்டானம் அப்ராப்தம் என்றிருக்கிற நான் எதைச் செய்வேன்? (எம்பெருமான்) ஆழ்வீர்! ஸ்வரூபத்துக்குச் சேராமற் போஞல் போகட்டும்; என்னைப் பெறலாமாகில் ஸாதன மென்று பேர் பெற்றிருக்கிறவற்றில் ஏதேனு மொன்றை அனுஷ்டித்தாலாகாதோ? (ஆழ்வார்) என்ஞன் செய்கேன்=பிரானே! உன்னைப் பெறுகை முக்கியமான பின்பு எதையும் அனுஷ்டிக்கலாமப்பீர்! நீ தந்தது ஜ்ஞானமாத்ரமாகில் அனுஷ்டிக்கலாம்; பக்திரூபாபந்ந ஜ்ஞானமன்ரே நீ தந்தது. *காலாழும் நெஞ்சழியும் கண் சுழலு மென்னும்படி ஒன்றையும் அடைவுபட அநுஷ்டிக்க க்ஷமனல்லாமே பக்தி பரவசஞன நான் எதை யனுஷ்டிப்பேன். ஆகவே கழல்களவையே சரணுகக் கொண்ட குருகூர்ச் சடகோபஞயிராநின்றேன் என்ரூராயிற்று. உலகத்திலுள்ளவர்களை அஜ்ஞர் ஜ்ஞானிகள் பக்திபரவசர் என்று மூன்று வகுப்பிலே யடைக்கலாம். அஜ்ஞர்கள்

